# தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத் திங்கள் வெளியீடு.

| | | |
|---|---|---|
| துணர் ௨௭ | திருவள்ளுவர் யாண்டு ௧௯௮௨<br>கர—மார்கழி<br>1951—டிசம்பர் | மலர் ௯ |


## கதிர்நாட் கல்லூரி.

நம் கரந்தைத் தமிழ்ச் சங்கத்தில், தமிழ்மொழியி லுள்ள அரிய நூல்களைப் பலரும் எளிதில் அறிந்து பயன் பெற வேண்டும் என்ற நோக்கத்துடன், "கதிர்நாட் கல்லூரி" என்ற அமைப்பில், ஞாயிறுதோறும் பல ஆண்டுகளாக நடைபெற்றுவந்த தமிழ்நூற் பயிற்சி, இடையில் சில ஆண்டுகளாக நின்றிருந்ததை மீண்டும் நடைபெறச் செய்யும் கருத்துடன், நாளிது திருவள்ளுவர் யாண்டு 1982, கர, மார்கழி, முதல் நாள் (16—12—51) தொடங்கி, ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமையிலும் மாலை 6 மணிமுதல், பின் குறிப்பிட்டுள்ள நிகழ்ச்சி நிரலின்படி, சங்க நூல்களுள் முதலாவதாகப் "பத்துப்பாட்டு"த் தொகுதியி லுள்ள பாட்டுக்களைக் கற்பிக்கும் முறையில் நம் சங்கத் தமிழ்ப் பெருமன்றத்தில் விரிவுரைகள் நிகழும்.

தமிழன்பர்கள் வந்து கேட்டு இன்பமும் பயனும் பெறுமாறு வேண்டிக்கொள்கிறோம்.

ஆ. யா. அருளானந்தசாமி நாடார்,

12—12—51. தலைவர்.

1. திருமுருகாற்றுப்படை—திரு. சோ. திருநாவுக்கரசுப் பிள்ளை அவர்கள், M. A., L. T., **தலைமை ஆசிரியர்**, 2.

2. பொருநராற்றுப்படை—வித்துவான் திரு. C. கோவிந்தராசன் அவர்கள், **தமிழாசிரியர்**, 2.

3. பெரும்பாணாற்றுப்படை—வித்துவான் திரு. அடிகளாசிரியர் அவர்கள், **விரிவுரையாளர்**, 1.

4. சிறுபாணாற்றுப்படை—வித்துவான் திரு. திருஞானசம்பந்தம் அவர்கள், **தமிழாசிரியர்**, 2.

5. முல்லைப்பாட்டு—திரு. N. பாண்டரங்கன் அவர்கள், B. A., **ஆசிரியர்**, 2

6. மதுரைக்காஞ்சி—வித்துவான் திரு. மு. சடகோப. ராமாநுசம் பிள்ளை அவர்கள், **விரிவுரையாளர்**, 1.

7. நெடுநெல்வாடை—வித்துவான் திரு. ச. பாலசுந்தரம் அவர்கள், **விரிவுரையாளர்**, 1.

8. குறிஞ்சிப்பாட்டு—கரந்தைக் கவியரசு திரு. அரங்க. வேங்கடாசலம் பிள்ளை அவர்கள், **விரிவுரையாளர்**, 1.

9. பட்டினப்பாலை—புலவர் திரு. உ. பழநி அவர்கள், M.A., **தலைவர்**, 1.

10. மலைபடுகடாஅம்—வித்துவான் திரு. ந. இராமநாதன் அவர்கள், **விரிவுரையாளர்**, 1.

---

1. **கி. ஆ. அ. தே. கரந்தைப் புலவர் கல்லூரி.**
2. **கி. ஆ. அ. தே. உமாமகேசுவர உயர்நிலைப் பள்ளி.**

## மாலை வகுப்பு.

தமிழகத்தில் பண்டுதொட்டு மக்களுக்கு நல்லுணர்ச்சியைப் பெருக்கி வந்த பல வழிகளில், மார்கழித் திங்களில் ஒவ்வொரு நாளும் வைகறைப் பொழுதில், சமய வுணர்ச்சியும் இலக்கியச் சுவையும் பொதிந்துள்ள திருவாதவூரடிகளருளிய (1) திருப்பள்ளியெழுச்சி (2) திருவெம்பாவை, தொண்டரடிப்பொடியாழ்வார் அருளிய திருப்பள்ளியெழுச்சி, நாய்ச்சியார் அருளிய திருப்பாவை என்னும் பாடற்பகுதிகளை நன்கு பயின்றுவரும் வழக்கம் இன்றும் இருந்துவருகிறது. இவற்றைப் பொருளுணர்ச்சியோடு யாவரும் பயில்வதற்குத் துணையாகத் திருவள்ளுவர் யாண்டு ககூஅஉ, கர, கார்த்திகை, உங (9—12—1951) ஞாயிற்றுக் கிழமை முதல் ஒவ்வொரு நாளும் மாலை 6 மணிக்கு நம் சங்கத் தமிழ்ப்பெருமன்றத்தில் வித்துவான் திரு. அடிகளாசிரியர் அவர்களும், வித்துவான் திரு. மு. சடகோபராமாநுசம் பிள்ளை அவர்களும் முறையே பாடம் சொல்லிவருகிறார்கள்.

தமிழன்பர்கள் வந்து பயின்று பயனடைய வேண்டுகிறோம்

* * * * *

## துயரம்.

### திரு. லெ. க. காளியப்பத் தேவர் மறைவு.

நம் சங்க வாணாள் உறுப்பினர் திரு. லெ. க. காளியப்பத் தேவர் அவர்கள் (அந்தணர்பேட்டை, நாகபட்டினம்) 5-12-51 புதன் கிழமை மறைந்த செய்தி தெரிந்து பெரிதும் வருந்துகிறோம், அவர்கள் குடும்பத்தாருக்கு நம் சங்கத்தின் வருத்தத்தைத் தெரிவித்து ஆறுதல் கூறுகிறோம்.

# தமிழ் இசைச் சங்கம், சென்னை.

## 9-ஆவது தமிழிசை விழா

### சென்னை எழும்பூர் மியூசியம் தியேட்டரில்

24—12—51 தொடங்கி 31—12—51 முடிய நடைபெறும்.

யாழ்ப்பாணம் திரு. சு. நடேச பிள்ளை அவர்கள் விழாவைத் தொடங்கி வைப்பார்கள்.

* * * * *

தமிழ் இசைச் சங்கத்தின் தமிழ் இசை ஆராய்ச்சிக் குழுவினரால் நடத்தப்பெறும் மூன்றாவது பண் ஆராய்ச்சிக் கூட்டம் 1951, டிசம்பர், 26, 27, 28, 29-ஆம் நாட்களில் காலை 10 மணி முதல் 1 மணி வரை சென்னை எழும்பூர் மியூசியம் தியேட்டரில் நடைபெறும்.

குன்றக்குடி, திருவண்ணாமலை ஆதீன கர்த்தர் அருட்டிரு. தெய்வசிகாமணி அருணாசல தேசிக சுவாமிகள் அவர்கள் கூட்டத்தைத் தொடங்கி வைக்கவும், பேராசிரியர் திரு. பி. சாம்பமூர்த்தி அவர்கள் கூட்டத்துக்குத் தலைமை தாங்கவும் அன்புடன் இசைந்துள்ளார்கள்.

---

## யாழ் நூல்

பேராசிரியர் விபுலானந்த அடிகளார், பதினான்காண்டு ஆராய்ந்து எழுதிய அரிய, சிறந்த இசை நூல்.

பொருள் பொதிந்தது. தோற்றம் பொலிந்தது.

விலை மலிந்தது.

| | | |
|---|---|---|
| மெல்லிய தாள் | தாள் உறை | 15—0—0 |
| | துணி உறை | 18—0—0 |
| தடித்த தாள் | தாள் உறை | 18—0—0 |
| | துணி உறை | 20—0—0 |

அஞ்சல் செலவு வேறு.

# பரத சாத்திரம்.

மூன்றுவது
## தாளவியல்.

(முற்றொடர்ச்சி: துணர் உ௰௭, மலர் 8, பக்கம் 226)

*நிசத்த மாவாப நிட்கிரா மத்தொடு
விட்சேபம் பிரவேச மாமென விளம்புவர்.*

(இ-ள்.) நிசத்தமாவது[1] ஆவாபம்[2], நிட்கிராமம்[3], விட்சேபம்[4], பிரவேசம்[5] என்னு நான்கு வகைப்படும் —எ-று. (௬௨)

*சசத்தந் துருவஞ் சம்மியந் தாளம்
சன்னி பாதமெனச் சாற்றுவர் புலவர்.*

(இ-ள்.) சசத்தமாவது[6] துருவம்[7], சம்மியம்[8], தாளம்[9], சன்னிபாதம்[10], என்னும் நான்காம்—எ-று. (௬௩)

*தேசிகந் துருவகஞ் சர்ப்பிணி கிருடிமை
பதுமினி விசர்ச்சிதை பதாகை விட்சிப்த்தம்
பதித மென்னப் பகர்ந்தனர் புலவர்.*

(இ-ள்.) தேசிக மென்பது[11] துருவகம்[12], சர்ப்பிணி[13], கிருடிமை[14], பதுமினி[15], விசர்ச்சிதை[16],

---

1. அக்ஷரங்களைச் சப்தமில்லாமல் எண்ணுதல் நிசப்தக் கிரியையாம். 2. ஆவாபம்-விரல்களை மடக்கல், 3. நிட்கிராமம்-உயரவெடுத்தல். 4. விட்சேபம்—விரல்களைத் திறத்தல். 5. பிரவேசம்-வலப்பக்கமாகக் கொண்டு வருதல். 6. சப்தத்தோடு கூடியது சசத்தக் கிரியையாம். 7. துருவம்-நொடித்தல். 8. சம்மியம்-வலக்கை மேல் இடக்கையால் அடித்தல். 9. தாளம்-இடதுகைமேல் வலக்கையால் அடித்தல். 10. சந்நிபாதம்-இருகைகளாலும் சமமாய்த் தட்டுதல். 11. அக்ஷரம் எண்ணுமல் அங்க ரூபமாகவே கிரியை செய்யும் முறை தேசிகம் எனப்படும். 12. ஒலியின்றி நொடித்தல். 13. வலப்பக்கமாகக் கையை வீசுதல். 14. இடப்பக்கமாகக் கையை வீசுதல். 15. தலைகீழாகக் கையை வீசுதல். 16. பிடித்து வெளியே விரிறுதல்.

பதாகை[1], விட்சிப்தம்[2], பதிதம்[3] என எண் வகைப் படும்—எ-று. (௩௪)

சு-வது. அங்கம்.[4]

பிறைமதிகோல் விற்பாம்பு பேசுபுட்கால் அங்கம்
அறையு மநுதுரித மாந்துரிதம்—முறையிலகு
வாகுங் குருபுலுத மாங்காண்டக் காலென்பர்
பாகுமொழி யாயிவற்றின் பண்பு.

(இ-ள்.) தாளப்பிரமாணத்தின் அங்கங்களாவன: பிறை ‿, மதி O, கணை |, வில் ᑌ, பாம்பு ∽, புள்ளடி +, ஆம். இவற்றின் பரியாய நாமம் முறையே அநுதுரிதம், துரிதம், இலகு, குரு, புலுதம், காகபதம் என்பனவாம் —எ-று. (௩௫)

மறையாம் புருடன்றன் மன்னாறு தாரம்
பிறையாதி யங்கம் பிறக்கும்—முறையெனவே
தானங்க ளென்றார் தகுபாத நூலுணர்ந்த
மானவர்க ளென்ன மதி.

(இ-ள்.) வேத புருஷனுடைய ஆறுதாரங்களினு முறையே முற் சொன்ன தாளாங்கங்கள் பிறக்கும் —எ-று.[5] (௩௬)

தாள அங்க நிறம்.

பிறைவெண்மை கோல்பொன்மை பீடுமதி செம்மை
பிறைமானும் விற்கருமை பெட்பா—யுறையரவம்

---

1. உயர எடுத்தல். 2. விட்டு மூடுதல்.

3. இடப்புறத்துக்குள்ளே கொணர்தல்.

4. அங்கம்—தாளத்தின் உறுப்பு.

5. வேத புருடனுடைய மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி, ஆஞ்ஞை யென்னும் ஆறுதாரங்களினின்றும் விராமம், திருதம், லகு, குரு, புலுதம், காகபதம் என்னும் ஆறு உறுப்புக்களும் தோன்றின என்பது கருத்து.

பச்சையாங் காகபதம் பன்னிறமாக் கொள்வர்
உச்சிதமா நூலுணர்ந்தோ ரோர்ந்து.

(இ-ள்.) பிறை வெண்ணிறம், கணை பொன்னிறம், மதி செந்நிறம், வில் கருநிறம், பாம்பு பச்சைநிறம், புள்ளடி பலநிறமாம்—எ-று. (ருஎ)

பிறைமுதலாச் சொன்ன பெருமைபெறு மங்கத்
துறைதேவர் நந்திவரன் றுர்க்கை—அறையிசைதேர்
நாரதன்வா ணூரன் நற்பானு கம்பனுடன்
சேர்ந்த தேவரெனச் செப்பு.

(இ-ள்.) பிறைக்கு நந்திகேச்சுவரனும், மதிக்குப் பிரமனும், கணைக்குத் துர்க்கையும், விற்கு நாரதனும், பாம்புக்கு வாணூரனும், புள்ளடிக்குப் பானுகம்பனும் அதிதேவதைகளாம்—எ-று. (ருஅ)

பிறைகால் மதியரையாம் பேசுகணை யொன்றே
அறைவேணு வில்லிரண்டே யாகும்—உறையிளைசேர்
பாம்புமொரு மூன்றாகும் பன்னுவாய் புள்ளடிக்கோ
நான்காகு மாத்திரையை நாட்டு.

(இ-ள்.) பிறைக்குக் கால் மாத்திரை, மதிக்கு அரை மாத்திரை, கணைக்கு ஒரு மாத்திரை, வில்லுக்கு இரண்டு மாத்திரை, பாம்புக்கு மூன்று மாத்திரை, புள்ளடிக்கு நான்கு மாத்திரையாம்—எ-று. (ருகூ)

அத்த காணந் தனையறி விக்கின்
உத்து வேட்டித மூயாப வேட்டிதம்
பரிந்தயா விருத்தம் பரிவிருத் தம்மெனத்
தெரிந்துநா வின்செயல் செப்பினர் குறுமுனி.

(இ-ள்.) அத்தகரணம் என்பது உத்துவேட்டிதம், அபவேட்டிதம், பரிந்தயாவிருத்தம், பரிவிருத்தம் என நான்காம். இவற்றைப் பெரு நூலி லுணர்க—எ-று. (சூ)

தானக மென்பதைத் தானறி விக்கின்
ஆடவர் தந்நிலை வகுப்பிரு மூன்றும்

மாடமர் பெண்ணிலை யடிவழ கேழாம்
ஏசறு தேசி யிருபத்து மூன்றும்
ஆசறு மாதனம் ஒருபத் தைந்தாம்
ஆகத் தான மைம்பத் தொன்றெனப
பாகமுத் தமிழ்முனி பகர்ந்தனர் மாதோ.

(இ-ள்.) தானகமாவது ஆடவர் நிலைத் தாளம் ஆறு, பெண்களின் நிலைத் தாளம் ஏழு, தேசி இருபத்து மூன்று, ஆதனம் பதினைந்து, ஆகத் தானகம் ஐம்பத் தொன்று, இவற்றை மகர பாதத்தில் காண்க—எ-று. (சக)

ரு-வது. கிரகம்[1].

அதீத மநாகதஞ் சமம்விடங் கிரகம்

(இ-ள்.) கிரகம் நான்காவன அதீதம், அநாகதம், சமம், விடம் என நான்காம்—எ-று. (சஉ)

அவற்றுள், குரல்முன் றாளம் பின்வரு மதீதம்.

(இ-ள்.) முற் கூறிய கிரியை நான்கனுள் குரல் முன்னும் தாளம் பின்னும் வருவது அதீதமாம்—எ-று. (சங)

தாள முன்குரல் பின்வருவ தநாகதம்.

(இ-ள்.) தாள முன்னுங் குரல் பின்னும் வருவது அநாகதம்—எ-று. (சச)

குரலுந் தாளமு மொப்பது சமமாம்.

(இ-ள்.) குரலுந் தாளமும் ஒத்து வருவது சமமாம் —எ-று. (சரு)

குரல் தாள முன்பின் கலப்பது விடமாம்.

(இ-ள்.) குரலும், தாளமும் முன்னும் பின்னுங் கலப்பது விடமாம்—எ-று. (சசா)

---

1. தாளத்தில் பாட்டினை எடுக்கு மிடம் கிரகம் என்பர்.

## கூ-வது. ஜாதி.[1]

சதுரசிர திரிசிர மிசிரங் கண்டம்
சங்கீ ரணமிவை சாற்றிடு மைந்தாம்
மறையோர் மன்னவர் வைசியர் சூத்திரர்
அறையுறு சங்கிரம சாதிய தாகும்.

(இ-ள்.) சாதியாவன சதுரசிரம், திரிசிரம், மிசிரம், கண்டம், சங்கிரணம் என ஐந்தாம். முறையே மறையோர், மன்னவர், வணிகர், சூத்திரர், சங்கிரம சாதியாம். பிறையாதி சர்ப்ப மீறாகக் கொள்க—எ-று. (சுஎ)

புள்ளடி வட்டம் அந்த்ரா சாதியாம்.

(இ-ள்.) காகபதம் வட்டரூபம் அந்தரசாதியாம் —எ-று. (சுஅ)

இவற்றுள்

சதுரசிரஜாதிலகுவுக்கு–ச–எழுத்தாகும்–சரிகரி–பிரா [மணசாதி

திரிசிரஜாதிலகுவுக்கு–ங–எழுத்தாகும்–சரிக–அரசசாதி

மிசிர்ஜாதிலகுவுக்கு–எ–எழுத்தாகும்–சசரிகசரிக– [வைசியசாதி

கண்டஜாதிலகுவுக்கு–ரு–எழுத்தாகும்–சரிகரிச–சூத்திர [சாதி

சங்கீர்ணஜாதிலகுவுக்கு–கூ–எழுத்தாகும்–சரிசசரிசகரிச [–சங்கரசாதி

எல்லா அநுதுரிதத்துக்கு–க–எழுத்தாகும்–ச.

எல்லாத் துரிதத்திற்கு–உ–எழுத்தாகும்–சரி.

---

1. லகு வென்ற அங்கத்தினால் பிரிக்கப்படும் பகுப்பு ஜாதி யெனப்படும்.

| தாளம் | திரிசிரஜாதிலகு ங-எழுத்து | | சதுரசிரஜாதிலகு ச-எழுத்து. | | கண்ட ஜாதிலகு ரு-எழுத்து. | |
|---|---|---|---|---|---|---|
| துருவம் | சரிக, சரி, சரிக, ரிகம | கக | சரிகம, கரி, சரிகரி, சரிகம | கச | சரிகரிச, சரி, சசரிகரி, சரிகமா | கஎ |
| மட்டிய | சரிக, சரி, ரிகம | அ | சரிகரி, சரி, சரிகம | க0 | சரிகரிச, சரி, சரிகமா | கஉ |
| ரூபகம் | சச, ரிகம | ரு | சரி, சரிகம | கூ | சா, சரிகமா | எ |
| சம்பை | சசரி, க, மா | கூ | சரிகரி, க, மா | எ | சரிகரிச, ரி, கம | அ |
| திரிபுடை | சரிக, சரி, கம | எ | சரிகரி, சரி, கம | அ | சரிகசரி, சரி, கம | கூ |
| அடதா | சரிக, சரிக, சரிகம | க0 | சரிகரி, சரிகரி, சரி, கம | கஉ | சரிகசரி, சரிகசரி, சரி, கம | கச |
| ஏகதா | சரிக | ங | சரிகா | ச | சரிகமப | ரு |

| தாளம் | மிசிரஜாதிலகு எ-எழுத்து | | சங்கீரண ஜாதிலகு கூ-எழுத்து | |
|---|---|---|---|---|
| துருவம் | சசரிகசரிக, சரி, சசரிகரிசரி, சசரிரிககம | உங | சரிசசரிசகரிக, கரி, கமககரிரிசரிச, சசரிரிகசரிகம | உகூ |
| மட்டிய | சரிகரிகரிச, ரிச, சரிகசரிகம | ககூ | சகாரிகசரிகரி, ரிச, ரிகரிரிசகரிகம | உ0 |
| ரூபகம் | சரி, சரிகசரிகம | கூ | சரி, சசரிசரிகரிகம | கக |
| சம்பை | சரிகசரிகரி, க, மா | க0 | சரிகசரிகரிசரி, க, மா | கஉ |
| திரிபுடை | சரிகமசகரி, சரி, கம | கக | சரிகசரிசசரிச, சரி, கம | கங |
| அடதா | சரிகரிசரிக, சரிசகரிகம, சரி, கம | கஅ | சாரிகரிசரிகரி, சாகரிகசரிகரி, சரி, கம | உஉ |
| ஏகதா | சசரிசரிகம | எ | சரிசரிகசரிகம | கூ |

எ-வது. களை.[1]

*ஒன்றிரண் டொருநான் காங்களை மூன்றே.*

(இ-ள்.) களையென்பது ஒருகளை, இருகளை, நாற்களை என மூன்றும்—எ-று. (சகூ)

*அக்கர காலமாக் கிரியை யொடும்வரல்*
*ஏக களையென விசைத்திட லாகும்*
*இதனி னிரட்டி துவிகளை யாகும்*
*துவிகளை யிரட்டி சதுர்க்களை யாகும்.*

(இ-ள்.) அந்தக் களைகள் அக்கரகாலமாகக் கிரியையோடு வரல் ஏககளை, இரட்டித்து வரல் துவிகளை, துவிகளை இரட்டித்துவரல் சதுர்க் களையாம்—எ-று. (ருO)

அ-வது. இலயை.[2]

*விளம்ப மத்திமம் துரிதம தாம்லயை*
*களைக்குக் கூறிய விதியே யிதற்குமாம்.*

(இ-ள்,) இலயையாவது விளம்பமென்றும், மத்திமமென்றும், துரிதமென்றும் மூன்று வகைப்படும். இதற்கும் முற் களைக்குக் கூறிய விதியேயாம்—எ-று. (ருக)

கூ-வது. யதி.[3]

*யதிசமம் விடம மிருதங்கம் வேத*
*மத்தியங் கோபுச்சஞ் சுரோதோ வகமென்*
*றுற்ற வாறெனச் சொற்றனர் புலவர்.*

(இ-ள்.) யதி யென்பது சமம், விடமம், மிருதங்கம், வேதமத்தியம், கோபுச்சம், சுரோதோவகம் என ஆறும்—எ-று. (ருஉ)

---

1. *களை—தாளங்களுக்குரிய கால நியதியை வரையறைப் படுத்துவது.*

2, *இலயை—லயம். லயம்—தானத்திற்கு அடிப்படையாகிய அசைவு.*

3. *யதி—தாளத் தொடர்புடைய சொற் கட்டுக்களை விரித்துச் செல்லும் முறை.*

*அவற்றன், நெட்டங்கங் குற்றங்க நேர்வரல் சமமாம்.*

(இ-ள்.) நெட்டங்கமும் குற்றங்கமும் சமமாய் வரல் சமயதியாம்[1]—எ-று. உதாரணம்: ‿ ‿ | |. (ருங)

*எல்லா வங்கமு முறையின்றி விரவல்*
*விடம யதியென விளம்பினர் புலவர்.*

(இ-ள்.) எல்லா அங்கமும் ஒழுங்கின்றி விரவி வருவது விடமயதியாம்[2]—எ-று. உதாரணம் ♀ ‿ o. (ருச)

*முதலிறு திகளிற் குற்றங்க மிடையே*
*நெட்டங்கம் வருவது மிருதங்க யதியாம்,*

(இ-ள்.) முதலிலும் இறுதியிலும் குற்றங்கமும் இடையில் நெட்டங்கமும் வருவது மிருதங்க யதியாம்[3]—எ-று. உ-ம். ‿ o ♀ o ‿. (ருரு)

*முதலிறு திகளில் நெட்டங்க மிடையே*
*குற்றங்கம் வருவது வேத மத்திய யதி.*

(இ-ள்.) முதலிலும் இறுதியிலும் நெட்டங்கமும் இடையில் குற்றங்கமும் வருவது வேத மத்திய யதியாம்[4]—எ-று. உ-ம். | ‿ |. (ருசா)

---

1. *சமம்—ஒத்து வருவது.*

2. *விடமம்—முறைமாறி வருவது.*

3. *மிருதங்கத்தின் நடு பருத்து இரண்டு பக்கங்களும் சிறுத்திருத்தல் போன்று முதலும் இறுதியும் குற்றங்கமும் இடையே நெட்டங்கமும் அமைந்தமையின் மிருதங்கயதி யென்னும் பெயர்த்தாயிற்று.*

4. *உடுக்கை இரு பக்கமும் விரிந்து நடுவே சுருங்கியிருத்தல் போன்று முதலும் இறுதியும் நெட்டங்கமும் இடையே குற்றங்கமும் வருவது வேத மத்திய யதி.*

முதலினெட் டங்கமு மிறுதிகுற் றங்கமும்
நிரலே வருவது கோபுச்ச யதியாம்.

(இ-ள்.) முதலில் நெட்டங்கமும் கடையிற் குற்றங்கமும் நிரையே வருவது கோபுச்சயதியாம்[1]—எ-று.
உ-ம். ஜி ૨ | ೦ ‿ (௫௭)

முதலிற்குற் றங்கமு மிறுதிநெட் டங்கமும்
நிரலே வருவது சுரோதோ வகமாம்.

(இ-ள்.) முதலிற் குற்றங்கமும் இறுதியில் நெட்டங்கமும் நிரையே வருவது சுரோதோவகயதியாம்[2]—எ-று. உ-ம். ‿ ೦ | ૨ ૨. இவைகளுக்குக் காகபத மொழித்துக் கொள்க. (௫௮)

ய-வது. பிரத்தாரம்.[3]

பிரத்தா ரயதி விரிக்கிற் பெருகும்
மற்றையோர் நூலில் வகுத்தனர் கொளலே.

(இ-ள்.) பிரத்தாரயதியை விரித்துக் கூறின், அளவு படாதாகையால் மகாபாரத முதலிய பெரு நூல்களில் அறிந்து கொள்க—எ-று. (௫௯)

௯-வது. தாளவியல் முற்றிற்று.

ஆக இயல் ௯-க்குச் செய்யுள்-உ௫௬.

---

1. கோபுச்சம்—பசுவின் வால். அடி பெருத்து நுனி சிறுத்துள்ள பசுவின் வாலைப் போன்று முதலில் நெட்டங்கமும் இறுதியிற் குற்றங்கமும் வருவது கோபுச்சயதியாம்.

2. ஆற்றின் தொடக்கம் சிறிதாய்ப் பின் வர வரப் பெருகிச் செல்வது போன்று முதலில் குற்றங்கமும் இறுதியில் நெட்டங்கமும் அமைந்தது சுரோதோவகயதியாம்.

3. தாள அங்கத்தை முறையே பெருக்கிச் செல்லும் முறை பிரத்தார மெனப்படும்.

நான்காவது

# ஒழிபியல் *

## க-வது. பூமிதேவிலக்ஷணம்.

மண்மகள் தன்னை நீண்ட மலைகளோ ரெட்டுந் தாங்கும்
திண்ணிய கிரிகள் தம்மைத் திறல்கரி யெட்டுந் தாங்கும்
கண்ணுமக் கரிகள் தம்மை நயன்றலை நாகந் தாங்கும்
அண்ணல்மா நாகந் தன்னை யாதார சத்தி தாங்கும். (க)

சத்தியைக் கூர்மந் தாங்குந் தகைபெறு கூர்மந் தன்னைச்
சித்தியு முத்தியான சீர்பெறு சிவமே தாங்கும்
இத்தகை யாகி நின்ற இருநில மகளை நாளும்
பத்தியா இருகை கூப்பிப் பணிந்துவந் தனைசெய் வோமே.
(உ)

நர்த்தகன் நடனந் தொடங்கும்போது பூமிதேவியை வணங்கல் மரபாகலின் பூமியின் இயல்பைக் கூறுகின்றார். இவ்விரண்டு செய்யுளும் ஒரு தொடர்.

(இ-ள்.) பூமியை அஷ்டகுலாசலங்களும், அவ்வசலங்களை அஷ்டகஜங்களும, அக் கஜங்களை ஆதிசேஷனும், அவனை ஆதாரசத்தியும், அச் சத்தியை ஆதிகூர்மமும், அக் கூர்மத்தைச் சிவமுந் தாங்கும். இவ்விலக்கணத்தையுடைய பூமிதேவியைத் திரிகரண சுத்தமாகப் பத்தியோடு வணங்குவோம்—எ-று.

பூமி தேவியின் பொன்முடி தெற்குத்
தேமலர்ப் பாதம் திகழ்ந்திடும் வடக்குச்
சயனங் கொள்பவர் தானவாச் சியமுதல்
நயமுட னடிப்பவர் நல்லவீ டெடுப்பவர்
வயலுழு முழுநர் வனசரோர் பதத்தில்

*முன்னுள்ள மூன்றியல்களிலும் சொல்லாது எஞ்சிய இலக்கணங்களைத் தொகுத்துக் கூறுவது.

நின்று வணங்கி நேர்பெறு மலர்தூஉய்ச்
செய்யும் வினையெலாஞ் சிந்தையிற் சினவா
துய்யும் வகையே யுகர்தரு கென்னப்
போற்றி செய்து புகழ்ந்திடல் கடனே.

(இ-ள்.) பூமிதேவியின் அழகிய திருமுடி தெற்கும், தாமரை மலர்போன்ற திருவடி வடக்கு மாகும். சயனங்கொள்பவர், தாள முதலிய வாச்சிய மடிப்பவர், நடனஞ் செய்பவர், வீடெடுக்க அஸ்திபாரஞ் செய்பவர், உழுபவர், வட திசையை நோக்கி நின்று மலர்கள் தூவி வணங்கி நாங்கள் செய்யுங் குற்றங்களை யுள்ளங் கொள்ளாது இரக்ஷிக்க வேண்டுமென்று தோத்திரஞ் செய்து பின்பு தொடங்க வேண்டும்—எ-று. (௯)

அஷ்ட கஜ லக்ஷணம்[1]

கீட்டிசை யாதியாக் கிளக்குமெண் டிசைக்கும்
காட்டிய முறையே நல்லயி ராவதம்
புண்ட ரீகம் பொருவறு வாமனம்
வண்மை குமுத மடல்பெறு மஞ்சனம்
புட்ப தந்தம் புகழ்சார்வ பவுமம்
பெட்புறு சுப்பிர தீபமா மிவற்றின்
நன்னிறந் தாமரை நாட்டுபொன் பச்சை
சொன்ன சாம மிசனஞ் சிவப்பு
நீல மென்ன நிகழ்த்தினர் முறையே.

(இ-ள்.) கீழ்த்திசை யானை ஐராவதம், நிறம் வெள்ளை; தென்கீழ்த்திசை யானை புண்டரீகம், நிறம் தாமரைப்பூ; தென்றிசை யானை வாமனம், நிறம் பொன்; தென்மேற்றிசை யானை குமுதம், நிறம் பச்சை; மேற்றிசை யானை அஞ்சனம், நிறம் கருமை; வடமேற்றிசை யானை புட்பதந்தம், நிறம் மஞ்சள்; வடதிசை யானை சார்வபௌமம், நிறம் சிவப்பு; வடகீழ்த்திசை யானை சுப்பிரதீபம், நிறம் நீலம்—எ-று. (௰)

---

1. அஷ்ட கஜம்—எட்டுத் திசையிலும் உள்ள எட்டு யானைகள்.

உ-வது. நாகஸ்வர லக்ஷணம்[1]

ஓங்கிய மூங்கி லுயர்சந்தம் வெள்ளிகஞ்சம்
தாங்குகருங் காலிசெங் காலிதந்தம்—பூங்குழலாய்
நாகசுரஞ் செய்யவே நன்றென்று ரிப்புவியில்
பாக மறிந்திடுவோர் பார்.

(இ-ள்.) நாகஸ்வரஞ் செய்வதற்கு மூங்கில், சந்தன மரம், வெள்ளி, வெண்கலம், கருங்காலிமரம், செங்கருங் காலிமரம், யானைத் தந்தம் ஆகிய ஏழு மாகும்—எ-று. (ரு)

இருக்குவே தத்திலே நின்றெழு நாகசு வரத்தின் தோற்றம்
அருக்கனு முன்செய் வட்ட மட்டமா நாகஞ் சூழல்
சுருக்கமாஞ் சில்லே சோமன் தோன்றிய பொன்னல் சத்தி
பெருக்கயா முட்டு வாரம் மாலெனப் பேசு வாரே.

(இ-ள்.) நாகஸ்வரம் இருக்கு வேதத்தினின்றுந் தோன்றியதாம். அடிவட்டஞ் சூரியன், மேற்சுற்று அஷ்ட நாகம், மேலிடுசில் சந்திரன், மேற் சிறு துளை சத்தி, உட்பெருந்துவாரம் விஷ்ணு வென்று நூலோர் கூறுவர்—எ-று. (சா)

போதில்வாழ் பிரமன் மூனும் பொருந்திய கண்டை யாகும்
சோதியே நாத மாகும் துளையொலி சத்த மாதர்

---

1. நாகஸ்வரம் என்னும் துளைக் கருவி பண்டைத் தமிழகத்தில் வழங்கிய பெரு வங்கியத்தினை யடி யொற்றித் தோன்றியதாகும். ரு-ம் பாடல் நாகசுவரம் எவ்வெப் பொருளால் இயற்றத் தக்க தென்பதையும், சா, எ-ம் பாடல்கள் அதன் உறுப்புக்களின் தெய்வ சம்பந்தத்தையும், அ, கூ-ம் பாடல்கள் அதனை வாசித்தற்குப் பயன்படும் கைவிரல்களின் தெய்வ அமைப்பினையும், ய-ம் பாடல் அவ் வாத்தியத்தின் அளவு இன்னதென்பதையும் குறிப்பிடுவன வாகும்.

ஆதியா முருகன் முன்னா மாரர்க்கிடு சரங்கள் தேவர்
ஓதுமே லான கின்று வொப்பிலா விந்திர னுமே.

(இ-ள்.) கண்டை பிரமன், சுவயம் பிரகாச பரமே காதம், சிறுதுளையி லெழுமொலி சத்த மாதர்கள், முன் முருகக் கடவுள், சரம் தேவர்கள், இன்று இந்திரனும்—எ-று. (எ)

சட்டமாச் தக்க னக்கை கனிட்டமே வாணி யாகும்
தொட்டனு மிகையே யிந்திரன் ஞென்மனை யாட்டி யாகும்
மட்டின்மத் திமையே சொன்னோம் வைரவி யென்னுநாமம்
கட்டவிழ் கோதாய் கேள்நீ கருதுதற் சனிவ ராகி.

(இ-ள்) வலது கையின் கனிஷ்ட விரல் சரஸ்வதி, அனுமிகை இந்திராணி, மத்திமை வைரவி, தற்சனி வராகியாம்—எ-று. (அ)

வாமமாங் காத்தி லுற்ற வனுமிகை காளி யாகும்
தோமின்மத் திமையே நாரா யணியெனச் சொல்வர் [மேலோர்
தேமொழி தற்ச னிக்கே செப்புவன் துர்க்கை நாமம்
ஆமெனப் பொதியக் குன்றத் தருந்தமிழ் முனிவன் றானே.

(இ-ள்.) இடது கையின் அனுமிகை காளி, மத்திமை நாராயணி; தற்சனி துர்க்கை ஆமென்று குறுமுனி கூறினன்—எ-று. (கூ)

சொல்லுமுப் பானிரண்டா மங்குலமே நீளமதாம்
நல்லசுற்று நான்கோ டரையாகும்—மெல்லியலே
மெல்லத் துளையளவு நெல்லளவா மென்றுரைத்தார்
பல்ல கலையு ணர்ந்தோர் பண்டு.

(இ-ள்.) நாகஸ்வரம் முப்பத்திரண்டு விரல் நீளமும், நாலரை விரற் சுற்றளவும், மேற்றுளை நெல்லளவு மாக இருக்கவேண்டும்—எ-று. (ய)

## ௩-வது. மத்தள லக்ஷணம்.

மத்தளஞ் செய்யப் பலாமா விலிங்குநுணா
உத்தம சாதி யொளிர்வேம்பாம்—சொற்ற
மூன்றுசா ணீளமா மொய்குழலே சாணும்
ஆன்றகண்க ளின்னளவென் பார்.

(இ-ள்,) மத்தளம் செய்வதற்குப் பலாமரம், மாவிலிங்கமரம், நுணாமரம், தேக்குமரம், வேப்பமர மென்னும் ஐந்துமாம். ஒன்றரை முழ நீளமும், கண்ணிரண்டும் ஒவ்வொரு சாணு மாகும்—எ-று. (கக)

நடுவிட்ட மொன்றரைச்சா ணல்லமதி சோதி
மடுகண்ணு மார்ச்சனையே மாலாம்—படிபுகழும்
மேல்வளைய மூர்கோனா மேதகுவார் சத்தியாம்
பால்மொழியே கூறும் பரிசு.

(இ-ள்.) மத்தளத்தின் நடு உயரவிட்டம் ஒன்றரைச் சாணும்; இரண்டு கண்களுஞ் சூரிய சந்திராம்; மார்ச்சனை திருமாலாம்; கண் வளையம் பரிவேடமாம்; இறுக்குவார் சத்தியாம்—எ-று. (கஉ)

(தொடரும்.)

---

கக, கஉ-ஆம் பாடல்களில் மத்தளஞ் செய்தற்கேற்ற மரங்களிவை யென்பதும் மத்தளத்தி னளவு இது வென்பதும் கூறப்பட்டுள்ளன.

" மத்து என்பது ஓசைப் பெயர், இசையிடனுடைய கருவிகட்கெல்லாம் தளமாதலால் மத்தள மென்று பெயராயிற்று " என்பர் அடியார்க்கு நல்லார். அவர் கருத்துப்படி மத்து + தளம் என்னும் சொற்களே மத்தளம் என்றாயின எனஎண்ணவேண்டி யுளது. மத்து—மெல்லோசை. தளம்—இடம்.

# வீணை

‘பாணர் கைவழி’ ஆசிரியர் ஆ. அ. வரகுணபாண்டியன்.

அன்புருவான இறைவனையே சங்கத் தலைவராகக் கொண்டு முத்தமிழையும் வளர்த்த இத் தென் தமிழ் நாட்டில், பல்லாயிரம் ஆண்டுகட்குமுன் முத்தமிழில் ஒன்றாகிய இசைத் தமிழும், இசைக்குதவும் பல் லருங் கருவிகளும், பலவகையாய்ப் பெருகி மிக உயர்ந்த நிலையி லிருந்தன. இவ் விசைக் கருவிகள் பல்வேறு குலங்களாக வும் வகுப்புக்களாகவும் வகுக்கப்பட்டிருந்தன. இவற்றுள் யாழ்க் குலமு மொன்று. இவ் வியாழ்க் குலம் இற்றைக்கு 7000 ஆண்டுகட்கு முன்பிருந்த தொல்காப்பியர் கால முதற்கொண்டு, இற்றைக்கு 700 ஆண்டுகட்கு முன்பிருந்த சேக்கிழார் காலம்வரை இருந்ததாகப் பழந் தமிழ் நூற்கள் கூறுகின்றன. அதாவது, ஏறக்குறைய 6300 ஆண்டுகளாய் இத் தமிழகத்தில் மிகப் பழக்க வழக்கத்தி லிருந்த மரத் தாலும், தோலாலும், ஊன்பொருளாலு மான யாழ் என்ற இன்னிசைக் கருவி இற்றைக்கு 700 ஆண்டுகட்கு முன்பு தான் மறைந்தொழிந்ததாகக் காண்கிறோம். பதினன்கு வகைப்பட்ட யாழ்கள் மலிந்து கிடந்த இத் தமிழகத்தில், தற்போது ‘நம் இன்னி யாழ்’ என அன்புடன் சொந்தம் பாராட்டுதற்கு ஏதாவதொரு யாழ் கூட இல்லையே என் பதுவும், தற்போது முற்றும் மரத்தால் செய்யப்பட்டு நம் முன் காணப்படும் வீணையெனப் பெயர்கொண்ட கருவியும், ஆரியவர்த்தத்திருந்து நம் நாட்டிற்குக் கொண்டு வரப் பெற்றது எனப் பிறர் கூறும் மொழியுமே தெய்வ மக்களாகிய நந் தமிழர்க்கு மிக வருத்தத்தையும், வியப் பையும் விளைக்கின்றன.

பழந் தமிழ் நூற்கள் கூறும் பதினன்கு வகைப்பட்ட யாழ்களுள், இசைக் குதவுமாறு கருவி நலம் முற்றுப் பெற் றவை நான்கே யாகும். அவை, பேரியாழ், மகர யாழ், சகோட யாழ், செங்கோட்டி யாழ் என்பன.

'பேரியாழ் பின்னு மகரஞ் சகோடமுடன்
சீர்பொலியுஞ் செங்கோடு செப்பினர்—தார்பொலிந்த
மன்னுந் திருமார்ப வண்கூடற் கோமானே
பின்னு முளவே பிற.'

(சிலப்பு : 3, அரங்: செய்யுள் வரி 26: உரை.)

என இற்றைக்கு 800 ஆண்டுகட்கு முன்பிருந்த அடியார்க்குநல்லாரும் தம் உரையுள் கூறக் காண்கிறோம். பெரும்பான்மையாய் வழக்கி லிருந்த இந் நால்வகை யாழ்களுள் இரண்டொன்றும், சிறுபான்மையா யுள்ள பிற பல யாழ்களும்; கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டுவரை இத் தமிழகத்தில் வழக்கி லிருந்ததாகவும் அறிகிறோம்.

இவை நிற்க, சத்தியமூர்த்தி என வடமொழிப் பெயரினைப் பூண்ட பழந் தமிழர் தெய்வ மாகிய மெய்யப்பருக்குப் புதுக்கோட்டைக் கருகி லுள்ள திருமெய்யத்தில், ஒரு விட்டுணு ஆலயமிருக்கிறது. அவ்வாலயத்தின் கருவூலத்தி லுள்ள பெருமாளிற்கும் பின்புறத்தி லுள்ள கற்பாறையில் ஒரு பெருஞ்சிலை பொறிக்கப் பட்டிருக்கிறது. அச் சிலையில் பொறிக்கப்பெற்றிருப்பது ஓருருவ மல்ல. பல ஆண் உருவங்களும் பெண்ணுருவங்களு மான 33 உருவங்கட்கு மேற்பட்டிருக்கின்றன. அக்கோவில் உணவமைப்போர் அந்த 33 உருவங்களும் 'முப்பத்து முக்கோடி தேவர்களைக் குறிக்கின்றன' வென்கிறார்கள். இவைகளில் உள்ள ஓர் ஆண் உருவின் கையில் வில்போல் உருக் கொண்ட ஒரு சுருதியாழும், மற்றோ ருருவின் கையில் ஒரு செங்கோட்டி யாழும் பொறித்திருக்கக் காண்கிறோம். இவ் விருவகை யாழ்களைத் தவிர்த்த பிற யாழ்கள் அதன்கண் காணப்படவில்லை. இக்கோவிலும் இச்சிலையும் கி. பி. 8 ஆம் நூற்றாண்டில் ஒரு பல்லவ அரசனால் செய்விக்கப் பட்டன வென திரு. J. M. சோமசுந்தரம் பிள்ளை B. A., B. L., அவர்கள் கூறுகின்றனர். வேறு சில ஆராய்ச்சியாளர், அவ்வாலயம் கி. பி. 8 ஆம் நூற்றாண்டில் ஏற்பட்டபோதிலும், அச்சிலை வேறோரரசனால் கி.பி. 10 ஆம் நூற்றாண்டில் பொறிப்பிக்கப் பெற்றதென்றும் கூறுகின்றனர். இவர்கள் கூற்றிற்குத் தக்க சான்றுகளில்லை. அச்சிலைகளிலும் வேறு விவரங்கள் செதுக்கப்படவில்லை. என்றாலும், அக் கோவிலும் அச்சிலையும் கி. பி. 8 ஆம் நூற்றாண்டிலேயே

அமைக்கப்பெற்றன வென்றே நாம் வைத்துக்கொண்டாலும், கி. பி. 8 ஆம் நூற்றுண்டுவரை சுருதியாழும், செங்கோட்டி யாழும் இத் தமிழகத்தில் இருந்தன வென்பது தெளிவு

இதற்குப் பின் றேன்றிய கம்பரும், சேக்கிழாரும், அடியார்க்குநல்லாரும், நச்சினுர்க்கினியரும் பண்டை யாழைப் பற்றிக் கூறுகிருர்கள். இவர்களின் காலம் கி. பி. 12 அல்லது 13 ஆம் நூற்றுண்டுவரை யாகும். ஆகையினுல், இற்றைக்கு 700 ஆண்டுகட்கு முன்பு வரை யாழ்க்கருவி இத் தமிழகத்தில் மிகப் பழக்கத்தி லிருந்தது என்பதுறுதி. எனினும், யாழ் என்ற சொல் சிறுகச் சிறுக மறைவுற்று, வீணை என்ற சொல் சிறுகச் சிறுக வளர்ந்தும் விரிந்தும் வந்திருக்கின்ற தென நூற்கள் வாயிலாய் அறிகிறேம். அதாவது, யாழ் என்ற ஒரே சொல் தனக்குரிய கருவி களுடன் தனித்து வழங்கிய காலமு முண்டு. யாழ், வீணை என்ற இரு சொற்களும் அதே கருவிகளி லொன்றைத் தமக்கெனக் கொண்டு வழங்கிய இடைக் காலமு முண்டு. வீணை என்ற ஒரே சொல் அதே கருவியைத் தனக்கெனக் கொண்டு வழங்கிய கடைக் காலமு முண்டு. தற்போதும் வீணை என்ற சொல்லொன்றே வழங்கப்பட்டும் வருகிறது. ஆதலின் வீணை என்ற சொல் எக் காலத்தில், எவரால், எவ்வகைகளில் வழங்கப்பட்டு வந்தது என்பதைப் பற்றி ஆராய்வோம்.

இற்றைக்கு 7000 ஆண்டுகட்கு முற்றேன்றிய தொல் காப்பியம் முதற்கொண்டு, இற்றைக்கு 1900 ஆண்டுகட்கு முன்பு கடைச் சங்கத்தாரால் இயற்றப்பெற்ற எட்டுத் தொகை, பத்துப்பாட்டு ஆகிய பல தமிழ் நூற்களில் ஒன்றி லேனும் வீணை என்ற சொல்லே காணப்படவில்லை. மேலும், கடைச் சங்கத்தி னிறுதியிற் றேன்றியவரும், பத்துப்பாட்டின் பத்தாவது பாட்டினைப் பாடியவரு மான பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனுர் என்ற அந்தணப் புலவருங் கூடத் தம் நூலுள் வீணை என்ற சொல்லையோ, அல்லது அக்கருவியின் அமைப்பையோ கூறினுரில்லை. இந் நூலிற்கும் சற்றே பின்றேன்றிய, அதாவது, இற்றைக்கு 1850 ஆண்டுகட்கு முற்றேன்றிய சிலப்பதிகாரத் துள்ளும், இந்திர லோகத்தில் நடந்ததாகக் கருதப்படும்

ஒரு புராண நிகழ்ச்சியினைக் கூறும் அவ்வோரிடத்தில் மாத்திரமே வீணை என்ற சொல் காணக்கிடக்கிறது. அவ்விடத்திலும் அச்சொல்லிற்குச் "சரீர வீணை" யெனப்படும் மக்கள் யாக்கையையே பொருளாயமைத்துக் கூறக் காண்கிறோம். மேலும், இற்றைக்கு 800 ஆண்டுகட்கு முற்றோன்றிய அடியார்க்குநல்லாரும் தம் முரையுள் அச்சொல்லிற்கு,

"மங்கல மிழப்ப வீணை" வீணை-உருப்பசி கையில் வீணை யென்பாருமுளர். அது
பொருத்த மின்று. இனி, வீணையைச் சரீர வீணையாக்கி 'மங்கலமிழப்ப எனக் கொள்க." என்றும்,

"மிடறு என்றது சாரீரவீணை."

என்றும், சிலப்பதிகாரரின் கால வழக்கை நன்கறிந்து கூறியுள்ளார். நாம் இதனால் வீணை என்ற சொல் சங்கநூலில் புகுந்து விட்ட போதிலும், அக்காலத்தில் அச் சொல் 'சரீர வீணை, சாரீர வீணை' என்ற இரு பொருளையே உணர்த்திற்று எனக் காண்கிறோமே யொழிய, வீணை யென்றோர் இசைக் கருவியினை அச்சொல் உணர்த்துவதாகக் காண்கிலோம். இனி, நம் மாணிக்கவாசகர் தம் திருப்பள்ளியெழுச்சியில் கூறுவதைப் பார்ப்போம்.

'இன்னிசை வீணையர் யாழினர் ஒருபால்
இருக்கொடு தோத்திர மியம்பினர் ஒருபால்
துன்னிய பிணைமலர்க் கையினர் ஒருபால்
தொழுகையர் அழுகையர் துவள்கையர் ஒருபால்
சென்னியில் அஞ்சலி கூப்பினர் ஒருபால்
திருப்பெருந் துறையுறை சிவபெருமானே'

இதனுள், 'வீணையர், யாழினர்' என இரு பிரிவினரைக் கூறுதலால், மணிமொழியார் காலத்திலேயே 'வீணை யாழ் என்ற இருவகைக் கருவிகளும் இருந்திருத்தல் வேண்டும்' என ஒரு சிலர் கூறுவர். ஆனால், பல்வகைப்பட்ட குழுவினரையும் வடமொழி வேதத்தை ஓதும் இருக்கினரையும் கூறிய இத் தெய்வத் தமிழர், தம் தமிழி லுள்ள இறை வணக்கப் பாக்களைப் பாடும் குழுவினரைக் கூறினாரில்லையே! தமிழிற் பாடவல்ல இவர் அக் குழுவினரை எவ்விதம் மறந்துவிடுவார்? என நாம் குறுக்கிடின், அன்

ஞோர், 'ஏன் கூறவில்லை! கூறியிருக்கின்றுரே! இருக்கு என்ற வடமொழி வேதத்தையும், தோத்திரங்களா லான தமிழ்ப்பாக்களையும் இயம்பினவர் ஒருபாலிருந்தனர்' எனப் பொருள்பட, 'இருக்கொடு தோத்திர மியம்பினர் ஒருபால்' என கூறியிருக்கின்றுரே' என்பர். அதாவது, தோத்திரம் என்ற வடசொல்லிற்கு 'இறை வணக்கத் தமிழ்ப் பாக்கள்' எனப் பொருளமைத்துக் கூறுவர். ஆதலின் இவ் விடத்தை நாம் சுருங்க ஆராய்ந்துவிடுவோம்.

முதலாவதாக, 'இருக்கு வேதத்தினருடன் தமிழில்தோத் திரப் பாக்களைப் பாடவல்லவர் இருந்தனர்' என அன்ஞோர் கூறுவதால், இறைவணக்கத்திற் கேற்ற பாக்கள் வட மொழியில் இல்லையென்றும், தமிழ்மொழியில் மாத்திரமே உண்டென்றும், நாம் தப்பாக எண்ண வேண்டி நேரிடு கிறது. ஏன் எனில், இருக்குவேதத்தின் ஒரு பிரிவாகிய சாம வேதத்தில் தோத்திரப் பாக்கள் நிறைந்திருக்கின்றன. நம் தமிழ்மொழியில் மாத்திரமே இருக்கின்றன என்பது இல்லை. ஆகலின், "இருக்குவேதத்தைக் கொண்டே தோத் திரம் சொல்பவர் ஒரு குழுவினராக விருந்தனர்" எனப் பொருள் கொள்வதே சரி எனக் காண்கிறோம். மேலும், 'தோத்திரம்' என்ற வடசொல்லிற்கு 'இறை வணக்கத் தமிழ்ப் பாக்கள்" என்ற பொருள் எவ்விதத்திலும் பொருந்தி வராது என்பதையும் நாம் அறிவோம்.

இரண்டாவதாக, நாம் மணிமொழியாரின் காலத்தை நோக்குவோம். திரு. P. இராமநாதன் அவர்கள் தம் தமி ழகராதியில் மணிமொழியாரின் காலம் இற்றைக்கு 4000 ஆண்டுகட்கும் முற்பட்டதென்றும், நம் மறைமலையடிகள் இற்றைக்கு 3000 ஆண்டுகட்கு முற்பட்டதென்றும், வேறொருவர் இற்றைக்கு 1000 ஆண்டுகட்கு உட்பட்ட தென்றும் கூறுகின்றனர். எனினும், இவர் அரிமர்த்தன பாண்டியனுக்கு நரியைப் பரியாக்கிக் கொடுத்தவரலாற்றால், இவர் அப்பாண்டியனின் காலத்தவர் என்றும், இவ்வரலாற் றைக் கடைச்சங்கத்துப் புலவருள் ஒருவராகிய கல்லாடனார் தம்பாட்டுள் குறிப்பிடுவதால், இவர், சிலப்பதிகாரர் காலத் திற்கும் முற்பட்டவரென்றும் தெளிவாகிறது. அதாவது யாழ்க் கருவியை யாழ் என்றே கூறும் தொல்காப்பியம் முதற்கொண்டு பத்துப்பாட்டு ஈறுயுள்ள காலத்திற்கும்,

'வீணை' என்றதை, சரீர வீணையையும், சாரீர வீணையையும் பொருளாய் அமைத்துக் கூறும் சிலப்பதிகாரர் காலத்திற்கும் இடைப்பட்டது என்று அறிகிறோம். ஆகவின், அவர் தம் காலத்து மரபுப் படியே 'வீணையர்' என்றதற்கு 'இறை வணக்கப் பாக்களைப் பாட வல்ல சாரீர வீணையரையே' பொருளாய் அமைத்துக் கூறியிருக்கிறார் எனக் காண்கிறோம்.

மூன்றாவதாக, இவர் 'இன்னிசை வீணையர்' என வீணையருக்கு 'இன்னிசை' என்ற அடை மொழியைக் கொடுத்தும், யாழினருக்குக் கொடாதும் பாடியிருப்பதால், மறைப்பாக்களை இன்னிசையுடன் நிகழ்த்த வல்லது மக்களின் மிடறாகிய சாரீரவீணை ஒன்றே யாதலாலும், யாழ் பாக்களைச் சொல்ல இயலாதாதலாலும், இவர் இவ்விடம் வீணையர் என்றது மிடற்றால் இறைவணக்கப் பாக்களை இன்னிசையுடன் நிகழ்த்த வல்ல சாரீர வீணையினரையே குறிப்பிடுகிறார் எனத் தெளிவாய் அறிகிறோம். (திருமந்திரமணி துடிசைக்கிழார் அவர்களின் கருத்து மிது.)

நான்காவதாக, 'இருக்கு வேதத்தினருடன் தமிழ்ப் பாக்களைப் பாடுவோரும் சேர்ந்து ஒரே குழுவினராய் இருந்தனர்' எனப் பொருள் கொள்வோமே ஆயின், அக் குழுவினர் பாடியது எவரும் செவி கொடுத்துக் கேட்கவும் முடியாத ஒரு பெருங் கூச்சலாகத்தா னிருந்திருக்குமே யொழிய, மறை யியம்பிய தாகவோ, பாக்களைப் பாடிய தாகவோ ஒருபோது மிருந்திராது. ஆகவின், அவ் விரு இனத்தவரும் வெவ்வேறு குழுவினராகத் தானிருந்திருத்தலும் வேண்டும் என்பது திண்ணம். அதாவது, ஏழிசையாலான பண்ணமைப்புகளுடன் கூடிய தமிழ்ப் பாக்களைப் பாடவல்லவர் ஒரு தனிப்பட்ட குழுவினராய் யாழினர் மருங்கிலும், மூன்று அல்லது நான்கே சுரங்களொடு மாத்திரமே பாடும் இருக்கினர் தனிப்பட்ட ஒரு குழுவினராய்ப் பிரிந்தும் இருந்திருத்தலே கூடும்.

(தொடரும்)